கலத்ரம் வைதாத்ரம் கதிகதி பஜந்தே ந கவய :
    ச்ரியோ தேவ்யா : கோ வா ந பவதி பதி : கைரபி தனை : ।
மஹாதேவம் ஹித்வ ந தவ ஸதி ஸதீநாமசரமே
    குசாப்யாமாஸங்க : குரவகதரோரபி அஸுலப : || 96 ||

கிராமாஹுர்தேவீம் த்ருஹிணக்ருஹிணீம் ஆகமவிதோ
    ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீம் அத்ரிதநயாம் ।
துரீயா காபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா
    மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரஹ்மமஹிஷி || 97 ||

கதா காலே மாத: கதய கலித ஆலக்தகரஸம்
    பிபேயம் வித்யார்த்தீ தவ சரணநிர்ணேஜந ஜலம் ।
ப்ரக்ருத்யா மூகாநாமபி ச கவிதாகாரணதயா
    கதா தத்தே வாணீ முககமலதாம்பூலரஸதாம் || 98 ||

ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரிஸபத்நோ விஹரதே
    ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா ।
சிரம் ஜீவந்நேவ க்ஷபிதபசுபாசவ்யதிகர :
    பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத்பஜநவாந் || 99 ||

ப்ரதீபஜ்வாலாபிர் திவஸகரநீராஜநவிதி :
    ஸுதாஸூதேச்சந்த்ரோபலஜலலவைரர்க்யரசநா ।
ஸ்வகீயைரம்போபி: ஸலிலநிதிஸௌஹித்யகரணம்
    த்வதீயாபிர்வாக்பிஸ்தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம் || 100 ||

---

# முடிவுரை

ஸௌந்தர்ய லஹரி ஸ்லோகம் ஆதிசங்கரரால் இயற்றப் பட்டதால் இந்த ஸ்லோகத்தைப் பாராயணம் செய்தால் அம்பிகையின் அருள் நமக்கு நிச்சயம் கிடைக்கும். இந்த ஸ்லோகங்களை குருமுகமாக ஸ்ரீவித்யை ஜபம் எடுத்துக்கொண்டு பாராயணம் செய்வதால் விசேஷமான பலன் கிடைக்கும். ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வித குறைகள் இருக்கும் அவ ரவர்கள் அவரவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்றபடி ஸௌந்தர்ய லஹரி ஸ்லோகங்களை பாராயணம் செய்து பலன் அடைய வேண்டும் என்பதற்காகவே இந்தப் புத்தகத்தை எழுதி னேன். இந்த ஸ்லோகங்களை பாராயணம் செய்து நிறைய பேர் பலன் அடைந்தால் எனக்கு இந்தப் புத்தகத்தை எழுதியதன் பலன் பரிபூரணமாகக் கிடைக்கும்,

அம்பிகையின் அருள் அனைவருக்கும் கிடைக்க வேண்டும் என பிரார்த்திக்கிறேன்,

ஓம் தத் ஸத்.

# பாராயண தத்துவம்

உபநிஷத், கீதை, ருத்ரம், புருஷ ஸூக்தம், விஷ்ணு சகஸ்ர நாமம், லலிதா சகஸ்ரநாமம், ஸௌந்தர்ய லஹரி இவைகளை தினந்தோறும் பாராயணம் செய்ய வேண்டும் என்பது பெரியோர்கள் கண்ட முறை.

ஸ்வசா கோப நிஷத் கீதா
விஷ்ணோர் நாம ஸகஸ்ரநம்
ருத்ரஞ்ச பௌருஷம் ஸூக்தம்
நித்ய மாவர்த்த யேத்புத :

மற்றவைகளைப் பாராயணம் செய்யாவிட்டாலும் விஷ்ணு ஸகஸ்ரநாமத்தை மட்டுமாவது மறவாமல் பாராயணம் செய்ய வேண்டும்.

இப்பாராயண முறையை கூட்டு வழிபாடாகச் செய்வது மிகச் சிறந்தது.

பர, அயனம் என்ருல் சிறந்த வழி என அர்த்தம்.

உணவு உடம்போடு உடம்பாக மாறிவிடுவதுதான் ஊட்டத்தின் அறிகுறி. இதற்கு முதலில் உண்ட உணவு ஜீரணிக்கப்பட வேண்டும். அடுத்தபடி ஜீரணிக்கப்பட்ட உணவு ரத்தமாக மாறி உடம்பெங்கும் பாய்ந்து பரவ வேண்டும். பின்னர் ஏற்படுவதுதான் உணவு உடம்பாக மாறும் நிலை. இத்தகைய மூன்று நிலைகளையும் பாராயண முறையில் காணலாம்.

5 நிமிஷம் படித்தால் குறைந்தது 15 நிமிஷம் சிந்திக்க வேண்டும். கற்பதும் கேட்பதும் சிந்தனையால் ஜீரணமாகி தியானித்தால் ஜீவ ஓட்டமும் ஊட்டமாகி நம்முடன் ஒட்டிக் கலந்து ஒன்றுபட வேண்டும். இத்தகைய பாராயண நிலை தான் உள்ளத்துடனும் உடம்புடனும் ஒன்றுபட்டு வாழ்வுடன் வாழ்வாக இரண்டறக் கலப்பதாகும்.

திருமழிசை ஆழ்வாரும் ஒரு வகைப் பாராயண முறையில் யோக நிலை சித்திக்கப் பெற்ருர். இதற்கு ஆதாரம் அவர் வாக்கிலேயே உள்ளது.

வாசித்தும், கேட்டும் வணங்கி வழிபட்டும் பூஜித்தும் போக்கினேன் போது.

பாராயணம் நாவினுல் மட்டும் செய்யப்படவில்லை. உயிரும் பாராயணத்தில் பங்குபெற வேண்டும். பவாஸ்ரீ

---

## நான்கு நவராத்திரிகள்

லலிதாம்பிகையின் நவராத்திரி வசந்த நவராத்திரி பங்குனி மாத அமாவாசைக்கு மறுநாள் தொடங்கி நடைபெறுவது.

லலிதாவின் மந்திரியான ராஜமாதங்கியின் நவராத்திரி மாசி மாதத்து அமாவாசைக்கு மறுநாள் தொடங்கி நடைபெறுவது.

லலிதாவின் சேனாதிபதியான மஹாவாராஹியின் நவராத்திரி ஆடி மாதத்து அமாவாசைக்கு மறுநாள் தொடங்கி நடைபெறுவது.

புரட்டாசி மாதம் நடைபெறும் சாரதா நவராத்திரி, துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதி மூவருக்கும் கொண்டாடப்படுவது.